அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி வெளியீடு

॥ श्रीः ॥



"एषा शंकरभारती विजयते निर्वाणसौख्यप्रदा"

ஏஷா ஶங்கரபா⁴ரதீ விஜயதே நிர்வாணஸௌக்²யப்ரதா³

# श्रीजगद्गुरुग्रन्थमाला

ஸ்ரீ ஜக³த்³கு³ரு க்³ரந்த²மாலா

# ॥ अपरोक्षानुभूतिः ॥

# அபரோக்ஷானுபூ⁴தி꞉

ஸ்ரீ வாணீவிலாஸ் பிரஸ்
ஸ்ரீரங்கம்.
1963



॥ श्रीगुरुभ्यो नमः ॥

## ॥ समर्पणम् ॥

श्रीमच्छंकरदेशिकस्य महिता मूर्तिद्वयी या स्थिता
तत्रैका हि तिरोबभूव विजने केदारनाथस्थले ।
अन्या वर्णमयी तु भाष्यनिचयस्तोत्रप्रबन्धात्मना
सर्वत्रैव समुज्वला विजयते ताभ्यां तनुभ्यां नमः ॥ १ ॥

यस्तत्रास्ति लघुप्रबन्धनिचयः स्तोत्राणि भूयांसि वा
तेषां द्राविडभाषयाऽनुवदनं विद्वद्वरैः कारितम् ।
श्रीमच्छंकरसेविनी सुसमितिः सम्यक्प्रकाश्याधुना
विद्यातीर्थपदे समर्पयति तत् लोकोपकारक्षमम् ॥ २ ॥

शंकरगुरुसंस्थापितसर्वजगद्वन्द्यशारदापीठम् ।
शंकरसेवासमितिः प्रकरणमालार्पणादलंकुरुते ॥ ३ ॥

शंकरगुरुवररचितप्रकरणमालां शुभानुवादयुताम् ।
शंकरपरंपरागतविद्यातीर्थे समार्पिपत्समितिः ॥ ४ ॥

शंकरसेवारसिकाः शांकरसिद्धान्तसारसर्वस्वम् ।
शंकरसेवासमितिप्रकटनमालां सदाऽपि सेवन्ताम् ॥ ५ ॥

## பதிப்புரை.

ஸ்ரீ சிருங்ககிரி ஸ்ரீ ஜகத்குரு மஹா ஸந்நிதானம் அவர்களின் பரமானுக்ரஹத்தால் பிரசுரிக்கப்பட்டுவருகின்ற ஸ்ரீ ஜகத்குரு கிரந்தமாலையில் ஸ்ரீ சங்கரபகவத்பாதாசார்யார் அருளிய கிரந்தங்களில் **அபரோக்ஷானுபூ⁴தி:**, என்ற பிரகரணத்துக்கு வழக்கம் போல பதவுரை பொழிப்புரை, விரிவுரைகளுடன் வெளிவந்துள்ளன.

**அபரோக்ஷானுபூ⁴தி:** இந்த பிரகரணத்தில் இரண்டாவது சுலோகத்தில்

**अपरोक्षानुभूतिर्वै प्रोच्यते मोक्षसिद्धये।**
**सद्भिरेषा प्रयत्नेन वीक्षणीया मुहुर्मुहुः**

**அபரோக்ஷானுபூ⁴திர்வை ப்ரோச்யதே மோக்ஷஸித்³த⁴யே।**
**ஸத்³பி⁴ரேஷா ப்ரயத்னேன வீக்ஷணீயா முஹுர்முஹு:**

என்று கூறியிருப்பதால் இதற்கு '**அபரோக்ஷானுபூ⁴தி:**' என்ற பெயரை ஸ்ரீ பகவத்பாதர் அவர்களே ஏற்படுத்தியிருப்பதாகத் தெரிகிறது. இந்த பிரகரணத்தை அனுஸந்தானம் செய்வதன் மூலம் மோக்ஷஸாதனமான அபரோக்ஷானுபவம் ஏற்படுவதால் இதற்கு '**அபரோக்ஷானுபூ⁴தி:**' என்ற பெயர் அமைந்துள்ளது. அத்வைத தத்வத்திற்குத்தக்கபடி '**ப்ரஹ்மானுசிந்தனத்தில்**' தாம் காட்டிய ஹரிகுரு சிவயோகத்தை இங்கும் மங்கள சுலோகத்தில் காட்டுகிறுர்.

**'श्रीहरिं परमानन्दमुपदेष्टारमीश्वरम्'**

**'ஸ்ரீஹரிம் பரமானந்த³முபதே³ஷ்டாரமீஸ்வரம்'**

இங்கு 'உபதேஷ்டாரம்' என்பது குருவையும், 'ஈச்வரம்' என்பது சிவனையும் குறிக்கிறது ப்ரஹ்மானுசிந்தனத்தில் போலவே இங்கும் விஷ்ணுவுக்கும் சிவனுக்கும் நடுவில் குருவைக் காட்டியிருக்கிறுர்.

யோக சாஸ்திரத்தில் எட்டு அங்கங்களுடன் கூடியதாக அஷ்டாங்க யோகம் கூறப்பட்டிருக்கிறது. அந்த எட்டு அங்கங்களுடன் மேலும் ஏழு அங்கங்களைச் சேர்த்து 15 அங்கங்கள் ஞான ஸாதனமாக இங்கு உபதேசிக்கப்பட்டிருக்கின்றன. இதை ராஜயோகம் என்று கூறுகிறுர். அது ஹடயோகம். ஹடயோகத்திலும் ராஜயோகத்திலும் எட்டு அங்கங்களுக்குப் பெயர் ஒன்ருக இருந்தபோதிலும் பொருள் வெவ்வேறுகக் காட்டப்பட்டிருக்கிறது. மனத்திலுள்ள தோஷங்கள் முழுவதும் விலகியவர்களுக்கு இந்த ராஜயோகம் ஒன்றே போது மென்றும், இல்லாவிட்டால் ராஜயோகம், ஹடயோகம் இரண்டையும் அப்யஸிக்கவேண்டுமென்றும் கூறுகிறுர். ஞானிகளுக்கு பிராரப்தம் கிடையாது என்ற கருத்தையும், பிராரப்தம் உண்டு என்ற கருத்தையும் இங்கு ஸமரஸப்படுத்துகிறுர்.

இப்பிரகரணத்துக்கு தமிழில் பதவுரை, பொழிப்புரை, கருத்துரைகளை எழுதித் தந்து உதவியுள்ள **ஸ்ரீ R. கிருஷ்ணஸ்வாமி அய்யர்** அவர்களுக்கு நம் ஸமிதியின் சார்பில் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

ஸ்ரீ பகவத்பாதாள் அருளிய உயர்ந்த இந்த நூல் சிறந்த முறையில் வெளி வரும்படி பரமானுக்ரஹம் செய்து உள்ள சிருங்கேரி ஸ்ரீ ஜகத்குருவின் மலரடிகளை எப்பொழுதும் பணிவோமாக.

**K.V. சுப்பரத்னம் அய்யர்**,
பொதுக் கார்யதர்சி.
அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி

॥ श्रीः ॥

॥ ஸ்ரீ: ॥

# ॥ अपरोक्षानुभूतिः ॥

# அபரோக்ஷானுபூ⁴தி:

**ஸ்ரீ சங்கரபகவத்பாதாசார்யர் அருளியது.**

['அபரோக்ஷானுபூதி' என்ற இந்த பிரகரணம் 144 சுலோகங்கள் கொண்டது. 'நானே ப்ரஹ்மம்' என்ற அனுபவம் அபரோக்ஷமாக அதாவது ப்ரத்யக்ஷமாக ஏற்படுவதற்கு வேண்டிய ஸாதனங்களை இதில் கூறுகருர். ஜீவர்களையும், பிரபஞ்சத்தையும் வேருகத் தெரிந்துகொண்டிருக்கும் வரை அத்வைத ப்ரஹ்ம ஸாக்ஷாத்காரம் ஏற்படாது அதற்காக ஸாதன சதுஷ்டயத்தை முதலில் காட்டி ப்ரஹ்மவிசாரம் செய்யும் முறையையும் காட்டுகிருர். தேஹாதிகள் ஆத்மாவல்ல, ஜீவ ஸ்வரூபம் ஒன்றுதான், அது ப்ரஹ்மம்தான், பிரபஞ்சமும் உண்மையில் ப்ரஹ்மத்தைக்காட்டிலும் வேறல்ல, வேற்றுமைக்குக் காரணம் அக்ஞானம்தான் என்பனவற்றைப் பல யுக்திகளாலும், உபநிஷத் ப்ரமாணங்களாலும தீர்மானிக்கிருர். ஆத்ம விசாரம் செய்து அறிந்துகொண்ட தத்வம் அனுபவத்தில் வருவதற்கு 15 அங்கங்களுடன் கூடிய ராஜ யோகத்தை நிரூபணம் செய்கிருர். மனேதோஷங்கள் அதிகமாக இருக்குமானல் இந்த ராஜயோகத்துடன் ஹடயோகத்தையும் அப்யஸிக்க வேண்டும். இல்லாவிட்டால் ராஜயோகம் மட்டும் போதும். இந்த ஸாதனங்களால் ஏற்படும் ஞானநிஷ்டையைக்காட்டி உலகத்தோரின் பார்வையில் ஞானி தேஹமுள் ளவராகத் தோன்றியபோதிலும் ஞானிகளின் பார்வையில் ப்ராரப்தமும் கிடையாது என்று தீர்மானித்து 'பிராரப்தம் மட்டும் எஞ்சி நிற்கும்' என்று கூறும் சுருதியின் தாத்பர்யத்தையும் விளக்குகிருர். குருதேவதா ஸ்வரூபமான ஹரியின் நமஸ்காரத்து டன் தொடங்கும் இந்நூலின் கடைசியிலும் குருவினிடமும் ஈசுவரனிடமும் பக்தி உள்ளவர்களுக்குத் தான் விரைவில் ஸுலபமாக ப்ரஹ்மஸாக்ஷாத்காரமும் முக்தி ஆனந்தமும் ஏற்படும் என்று உபதேசிக்கிருர்.]

## முன்னுரை: -

**श्रीहरिं परमानन्दमुपदेष्टारमीश्वरम् ।**
**व्यापकं सर्वलोकानां कारणं तं नमाम्यहम् ॥ १ ॥**

**ஸ்ரீஹரிம் பரமானந்த³முபதே³ஷ்டாரமீஶ்வரம் ।**
**வ்யாபகம் ஸர்வலோகானும் காரணம் தம் நமாம்யஹம் ॥ 1 ॥**

**परमानन्दं** = உயர்ந்த ஆனந்தஸ்வரூபமாக இருப்பவரும்,
**பரமானந்த³ம்**

| | | |
|---|---|---|
| **उपदेष्टारं**<br>**உபதே³ஷ்டாரம்** | = | உபதேசம் செய்கிறவரும், |
| **ईश्वरं**<br>**ஈஶ்வரம்** | = | அடக்கி ஆள்பவரும், |
| **व्यापकं**<br>**வ்யாபகம்** | = | எங்கும் நிறைந்திருப்பவரும், |
| **सर्वलोकानां**<br>**ஸர்வலோகாநும்** | = | எல்லா உலகங்களுக்கும், |
| **कारणं**<br>**காரணம்** | = | காரணமாக இருப்பவருமான, |
| **तं**<br>**தம்** | = | அந்த (ஸர்வோத்கிருஷ்டரான), |
| **श्रीहरिं**<br>**ஶ்ரீஹரிம்** | = | ஶ்ரீ ஹரியை, |
| **अहं**<br>**அஹம்** | = | நான், |
| **नमामि**<br>**நமாமி** | = | வணங்குகிறேன். |

பரமாநந்த ஸ்வரூபியான ஶ்ரீ ஹரியை நான் நமஸ்கரிக்கிறேன். அவரே குரு. அவரே ஈசுவரர். எல்லா உலகங்களையும் வியாபித்திருப்பவரும் அவைகளுக்குக் காரணமாயிருப்பவரும் அவரே. **(1)**

## अपरोक्षानुभूतिर्वै प्रोच्यते मोक्षसिद्धये ।
## सद्भिरेषा प्रयत्नेन वीक्षणीया मुहुर्मुहुः ॥ २ ॥

**அபரோக்ஷானுபூ⁴திர்வை ப்ரோச்யதே மோக்ஷஸித்³த⁴யே ।**
**ஸத்³பி⁴ரேஷா ப்ரயத்னேன வீக்ஷணீயா முஹுர்முஹு:**

| | | |
|---|---|---|
| **मोक्षसिद्धये**<br>**மோக்ஷஸித்³த⁴யே** | = | முக்தி கிடைப்பதற்காக, |
| **अपरोक्षानुभूतिर्वै**<br>**அபரோக்ஷானுபூ⁴திர்வை** | = | ப்ரஹ்மஸாக்ஷாத்காரானுபவத்தை விளக்கும் அபரோக்ஷானுபூதி என்ற நூல், |
| **प्रोच्यते**<br>**ப்ரோச்யதே** | = | நன்கு சொல்லப்படுகிறது, |
| **एषा**<br>**ஏஷா** | = | இது, |

**सद्भिः** = ஸாதுக்களால்,

**ஸத்³பி⁴:**

**प्रयत्नेन** = முயற்சியுடன்,

**ப்ரயத்னேன**

**मुहुर्मुहुः** = அடிக்கடி,

**முஹுர்முஹு:**

**वीक्षणीया** = பார்க்கத்தகுந்தது. (சிந்திக்கத்தகுந்தது.)

**வீக்ஷணீயா**

மோக்ஷம் ஸித்திக்கவேண்டியதற்காக அபரோக்ஷானுபூதி (ப்ரஹ்மஸாக்ஷாத் கார அனுபவம்) இங்கு தெளிவாகச் சொல்லப்படுகிறது. இதை பிரயத்தினத்தோடு ஸாதுக்கள் அடிக்கடி சிந்திக்கவேண்டியது. (2)

## நான்கு ஸாதனங்கள்: -

**स्ववर्णाश्रमधर्मेण तपसा हरितोषणात् ।**
**साधनं प्रभवेत् पुंसां वैराग्यादिचतुष्टयम् ॥ ३ ॥**

**ஸ்வவர்ணாஶ்ரமத⁴ர்மேண தபஸா ஹரிதோஷணாத் ।**
**ஸாத⁴னம் ப்ரப⁴வேத் பும்ஸாம் வைராக்³யாதி³சதுஷ்டயம் ॥ 3 ॥**

**स्ववर्णाश्रमधर्मेण** = தன் வர்ணத்திற்கும் ஆச்ரமத்திற்கும் ஏற்பட்ட

**ஸ்வவர்ணாஶ்ரமத⁴ர்மேண** தர்மத்தினாலும்,

**तपसा** = தவத்தாலும்,

**தபஸா**

**हरितोषणात्** = ஈசுவரனை ஸந்தோஷப்படுத்துவதனால்

**ஹரிதோஷணாத்** (அவருடைய அனுக்ரஹத்தால்),

**पुंसां** = மனிதர்களுக்கு,

**பும்ஸாம்**

**वैराग्यादिचतुष्टयं** = வைராக்கியம் முதலான நான்கு,

**வைராக்³யாதி³சதுஷ்டயம்**

**साधनं** = ஸாதனம்,

**ஸாத⁴னம்**

**प्रभवेत्** = ஏற்படும்.

**ப்ரப⁴வேத்**

அவரவர்களுடைய வர்ணத்திற்கும் ஆசிரமத்திற்கும் ஏற்பட்ட தர்மானுஷ்டான த்தினாலும், தபஸ்ஸினாலும் பகவானை ஸந்தோஷப்படுத்துவதினால் மனுஷ்யர்களு க்கு வைராக்கியம் முதலான நான்கு ஸாதனங்கள் ஏற்படும். (3)

## வைராக்கியம்: -

**ब्रह्मादिस्थावरान्तेषु वैराग्यं विषयेष्वनु ।**
**यथैव काकविष्ठायां वैराग्यं तद्धि निर्मलम् ॥ ४ ॥**

**ப்3ரஹ்மாதி3ஸ்தா2வராந்தேஷு வைராக்3யம் விஷயேஷ்வனு ।**
**யதை2வ காகவிஷ்டா2யாம் வைராக்3யம் தத்3தி4 நிர்மலம் ॥ 4 ॥**

**यथैव काकविष्ठायां** = காகவிஷ்டையில்போல்,
**யதை2வ காகவிஷ்டா2யாம்**

**ब्रह्मादिस्थावरान्तेषु** = ப்ரஹ்மா (ப்ரஹ்மபதவி) முதல் ஸ்தாவரம் வரையிலுள்ள,
**ப்3ரஹ்மாதி3ஸ்தா2வராந்தேஷு**

**विषयेष्वनु** = எல்லா விஷயங்களிலும் தொடர்ந்து,
**விஷயேஷ்வனு**

**वैराग्यं** = வெறுப்பானது (முதல் ஸாதனமாகும்),
**வைராக்3யம்**

**तद्धि वैराग्यं** = அவ்விதமான வைராக்கியம்தான்,
**தத்3தி4 வைராக்3யம்**

**निर्मलं** = பரிசுத்தமானது.
**நிர்மலம்**

பிரஹ்மா முதல் ஸ்தாவரம் வரை எல்லா விஷயங்களிலும் ஆசையின்மை **வைராக்ய**மாகும். காக்கையின் விஷ்டையில் எவ்வளவு வெறுப்போ அவ்வளவு வெறுப்பு எல்லா விஷயங்களிலும் இருப்பதல்லவா சுத்தமான வைராக்கியம்? **(4)**

## நித்யா நித்யவஸ்து விவேகம்: -

**नित्यमात्मस्वरूपं हि दृश्यं तद्विपरीतगम् ।**
**एवं यो निश्चयः सम्यग्विवेको वस्तुनः स वै ॥ ५ ॥**

**நித்யமாத்மஸ்வரூபம் ஹி த்3ருஶ்யம் தத்3விபரீதக3ம் ।**
**ஏவம் யோ நிஶ்வய: ஸம்யக்3 விவேகோ வஸ்துன: ஸ வை ॥ 5 ॥**

**आत्मस्वरूपं** = ஆத்ம ஸ்வரூபம்,
**ஆத்மஸ்வரூபம்**

**नित्यं** = நித்யமானது,
**நித்யம்**

**दृश्यं** = பார்க்கப்படுவது (அநாத்மவஸ்து),
**த்3ருஶ்யம்**

| | | |
|---|---|---|
| **तद्विपरीतगं हि**<br>**தத்³விபரீதக³ம் ஹி** | = | அதற்கு எதிரிடையானதல்லவா (அநித்யமல்லவா), |
| **एवं**<br>**ஏவம்** | = | இவ்விதமான, |
| **यः**<br>**ய:** | = | எந்த, |
| **सम्यक्**<br>**ஸம்யக்** | = | திடமான, |
| **निश्चयः**<br>**நிஶ்வய:** | = | தீர்மானமோ, |
| **स वै**<br>**ஸ வை** | = | அதுதான், |
| **वस्तुनः**<br>**வஸ்துன:** | = | வஸ்துவின், |
| **विवेकः**<br>**விவேக:** | = | விவேகம். |

ஆத்ம ஸ்வரூபம் தான் நித்யம். பார்க்கப்படுவதெல்லாம் அதற்கு விபரீதமான தன்மை உடையது (அகித்யம்). இவ்விதம் திடமாகத் தீர்மானமேற்படுவதே "வஸ்து விவேகம்" (பகுத்தறிவு) ஆகும். **(5)**

### சமாதி ஷட்கம் - சமம், தமம்: -

**सदैव वासनात्यागः शमोऽयमिति शब्दितः ।**
**निग्रहो बाह्यवृत्तीनां दम इत्यभिधीयते ॥ ६ ॥**

**ஸதை³வ வாஸனத்யாக³: ஶமோ(அ)யமிதி ஶப்³தி³த: ।**
**நிக்³ரஹோ பா³ஹ்யவ்ருத்தீனாம் த³ம இத்யபி⁴தீ⁴யதே ॥ 6 ॥**

| | | |
|---|---|---|
| **सदैव**<br>**ஸதை³வ** | = | எப்பொழுதுமே, |
| **वासनात्यागः**<br>**வாஸனத்யாக³:** | = | வாஸனையை விட்டு விடுவது, |
| **शमोऽयमिति**<br>**ஶமோ(அ)யமிதி** | = | இது சமம் என்று, |
| **शब्दितः**<br>**ஶப்³தி³த:** | = | சொல்லப்பட்டது, |

**बाह्यवृत्तीनां** = வெளியில் செல்லும் புலன்களின்
**பா³ஹ்யவ்ருத்தீனாம்** வியாபாரங்களை,
**निग्रहः** = அடக்குவது,
**நிக்³ரஹ:**
**दम इति** = தமம் என்று,
**த³ம இதி**
**अभिधीयते** = சொல்லப்படுகிறது.
**அபி⁴தீ⁴யதே**

எப்பொழுதுமே வாஸனைகளை விட்டுவிடுதல் **"சமம்"** என்று சொல்லப்படும். வெளியில் போகும் விருத்திகளை நிக்ரஹம் செய்வது **"தமம்"** என்று சொல்லப்படுகிறது. (ஒருதடவை அனுபவித்த விஷயத்தை மறுபடியும் அனுபவிக்க வேண்டும் என்ற ஆசையைத் தூண்டும் (ஸம்ஸ்காரம் 'வாஸனை' எனப்படும்.) **(6)**

**உபரதி, திதிக்ஷை: -**

**विषयेभ्यः परावृत्तिः परमोपरतिर्हि सा ।**
**सहनं सर्वदुःखानां तितिक्षा सा शुभा मता ॥ ७ ॥**

**விஷயேப்⁴ய: பராவ்ருத்தி: பரமோபரதிர்ஹி ஸா ।**
**ஸஹனம் ஸர்வது³:கா²னாம் திதிக்ஷா ஸா ஶுபா⁴ மதா ॥ 7 ॥**

**विषयेभ्यः** = சப்தம் முதலான விஷயங்களிலிருந்து,
**விஷயேப்⁴ய:**
**परावृत्तिः** = (இந்திரியங்களின்) திரும்புதல்,
**பராவ்ருத்தி:**
**परमा** = சிறந்த,
**பரமா**
**सा** = அந்த,
**ஸா**
**उपरतिर्हि** = உபரதியல்லவா!
**உபரதிர்ஹி**
**सर्वदुःखानां** = எல்லாத் துன்பங்களையும்,
**ஸர்வது³:கா²னாம்**
**सहनं** = பொறுத்துக்கொள்வது,
**ஸஹனம்**
**शुभा** = சுபமான,
**ஶுபா⁴**

| | | |
|---|---|---|
| **सा**<br>**ஸா** | = | அந்த, |
| **तितिक्षा**<br>**திதிக்ஷா** | = | பொறுமையாக, |
| **मता**<br>**மதா** | = | எண்ணப்பட்டிருக்கிறது. |

விஷயங்களிலிருந்து திரும்புதல் சிலாக்யமான **'உபரதி'** ஆகும். எல்லா துக்கங்களையும் பொறுத்துக்கொள்ளுதல் சுபமான **"திதிக்ஷை"** என்று எண்ணப்படுகிறது. **(7)**

## ச்ரத்தை, ஸமாதானம்: -

**निगमाचार्यवाक्येषु भक्तिः श्रद्धेति विश्रुता ।**
**चित्तैकाग्र्यं तु सल्लक्ष्ये समाधानमिति स्मृतम् ॥ ८ ॥**

**நிக³மாசார்யவாக்யேஷு ப⁴க்தி: ஶ்ரத்³தே⁴தி விஶ்ருதா ।**
**சித்தைகாக்³ர்யம் து ஸல்லக்ஷ்யே ஸமாதா⁴னமிதி ஸ்ம்ருதம் ॥ 8 ॥**

| | | |
|---|---|---|
| **निगमाचार्यवाक्येषु**<br>**நிக³மாசார்யவாக்யேஷு** | = | உபநிஷத்திலும், குருவின் வார்த்தைகளிலும், |
| **भक्तिः**<br>**ப⁴க்தி:** | = | நம்பிக்கையானது, |
| **श्रद्धा**<br>**ஶ்ரத்³தா⁴** | = | சிரத்தை, |
| **इति**<br>**இதி** | = | என்பது, |
| **विश्रुता**<br>**விஶ்ருதா** | = | பிரஸித்தம், |
| **सल्लक्ष्ये**<br>**ஸல்லக்ஷ்யே** | = | பிரஹ்மமென்ற லக்ஷ்யத்தில், |
| **चित्तैकाग्र्यं तु**<br>**சித்தைகாக்³ர்யம் து** | = | மனம் ஒருமுகமாக நிலைத்திருத்தலோவெனில், |
| **समाधानं**<br>**ஸமாதா⁴னம்** | = | ஸமாதானம், |
| **इति**<br>**இதி** | = | என்று, |

| | | |
|---|---|---|
| **स्मृतं**<br>**ஸ்ம்ருதம்** | = | எண்ணப்பட்டிருக்கிறது. |

வேத வாக்யங்களிலும் குருவின் வார்த்தைகளிலும் உள்ள விசுவாசம் **"சிரத்தை"** என்பது பிரஸித்தம். ஸத் (பிரஹ்மம்) ஆகிற குறியில் மனஸை ஒரு முகமாக நிலை நிறுத்துதல்; **"ஸமாதானம்"** என்று எண்ணப்படுகிறது.

## முமுக்ஷுத்வம்: -

**संसारबन्धनिर्मुक्तिः कथं स्यान्मे दयानिधे ।**
**इति या सुदृढा बुद्धिर्वक्तव्या सा मुमुक्षुता ॥ ९ ॥**

**ஸம்ஸாரப³ந்த⁴நிர்முக்தி: கத²ம் ஸ்யான்மே த³யாநிதே⁴ ।**
**இதி யா ஸுத்³ருடா⁴ பு³த்³தி⁴ர் வக்தவ்யா ஸா முமுக்ஷுதா ॥ 9 ॥**

| | | |
|---|---|---|
| **दयानिधे**<br>**த³யாநிதே⁴** | = | கருணைக்கிருப்பிடமானவரே! |
| **संसारबन्धनिर्मुक्तिः**<br>**ஸம்ஸாரப³ந்த⁴நிர்முக்தி:** | = | ஸம்ஸாரமென்னும் கட்டிலிருந்து விடுதலை, |
| **मे**<br>**மே** | = | எனக்கு, |
| **कथं स्यात्**<br>**கத²ம் ஸ்யாத்** | = | எப்படி ஏற்படும், |
| **इति**<br>**இதி** | = | என்ற, |
| **या**<br>**யா** | = | யாதொரு, |
| **सुदृढा**<br>**ஸுத்³ருடா⁴** | = | நன்கு திடமான, |
| **बुद्धिः**<br>**பு³த்³தி⁴:** | = | எண்ணமுண்டோ, |
| **सा**<br>**ஸா** | = | அது, |
| **मुमुक्षुता**<br>**முமுக்ஷுதா** | = | முமுக்ஷுதையாக, |
| **वक्तव्या**<br>**வக்தவ்யா** | = | சொல்லத்தக்கது. |

ஸம்ஸாரமாகிற கட்டிலிருந்து எனக்கு எப்படி, ஹே தயாநிதே, விடுதலை கிடைக்கும் என்று நல்ல திடமான எண்ணம் எதுவோ அதை **"முமுக்ஷுதா"** என்று சொல்ல வேண்டும். **(9)**

## தத்வ விசாரம்: -

## उक्तसाधनयुक्तेन विचारः पुरुषेण हि ।
## कर्त्तव्यो ज्ञानसिद्ध्यर्थमात्मनः शुभमिच्छता ॥ १० ॥

**உக்தஸாத4னயுக்தேன விசார: புருஷேண ஹி ।**
**கர்த்தவ்யோ ஜ்ஞானஸித்3த்4யர்த2மாத்மன: ஶுப4மிச்ச2தா ॥ 10 ॥**

| | | |
|---|---|---|
| **उक्तसाधनयुक्तेन**<br>**உக்தஸாத4னயுக்தேன** | = | கீழே சொல்லப்பட்ட ஸாதனங்களுடன் கூடியவனும், |
| **आत्मनः**<br>**ஆத்மன:** | = | தனக்கு, |
| **शुभं**<br>**ஶுப4ம்** | = | நன்மையை, |
| **इच्छता**<br>**இச்ச2தா** | = | விரும்புகின்றவனுமான, |
| **पुरुषेण**<br>**புருஷேண** | = | புருஷனால், |
| **ज्ञानसिद्ध्यर्थं**<br>**ஜ்ஞானஸித்3த்4யர்த2ம்** | = | ஞானம் ஏற்படுவதற்காக, |
| **विचारः**<br>**விசார:** | = | விசாரம், |
| **कर्त्तव्यो हि**<br>**கர்த்தவ்யோ ஹி** | = | செய்யத்தகுந்ததல்லவா! |

மேலே சொல்லப்பட்ட (விவேகம், வைராக்யம், சமாதி ஷட்கம், முமுக்ஷுதா) ஸாதனங்களோடுகூடின மனுஷ்யன் தனக்கு சேமத்தை வேண்டுபவனாய் ஞானம் ஸித்திப்பதற்காக விசாரம் செய்யவேண்டும். **(10)**

## नोत्पद्यते विना ज्ञानं विचारेणान्यसाधनैः ।
## यथा पदार्थभानं हि प्रकाशेन विना क्वचित् ॥ ११ ॥

**நோத்பத்3யதே வினா ஜ்ஞானம் விசாரேணான்யஸாத4னை: ।**
**யதா2 பதா3ர்த2பா4னம் ஹி ப்ரகாஶேன வினா க்வசித் ॥ 11 ॥**

| | | |
|---|---|---|
| **यथा**<br>**யதா²** | = | எப்படி, |
| **प्रकाशेन विना**<br>**ப்ரகாஶேன விநா** | = | வெளிச்சமில்லாமல், |
| **क्वचित्**<br>**க்வசித்** | = | ஒரு இடத்திலும், |
| **पदार्थभानं**<br>**பதா³ர்த²பா⁴னம்** | = | வஸ்துக்களின் தோற்றம், |
| **नोत्पद्यते हि**<br>**நோத்பத்³யதே ஹி** | = | ஏற்படுவதில்லையோ (அவ்விதமே), |
| **विचारेण विना**<br>**விசாரேண விநா** | = | விசாரமில்லாமல், |
| **अन्यसाधनैः**<br>**அன்யஸாத⁴னை:** | = | வேறு ஸாதனங்களால், |
| **ज्ञानं**<br>**ஞானம்** | = | ஞானம், |
| **नोत्पद्यते**<br>**நோத்பத்³யதே** | = | உண்டாகிறதில்லை. |

எவ்விதம் வெளிச்சமில்லாமல் போனால் பதார்த்தங்கள் பிரகாசிக்காதோ, அவ்விதமே விசாரத்தைத் தவிர வேறு ஸாதனங்களினால் ஞானம் உண்டாகாது. **(11)**

## कोऽहं कथमिदं जातं को वा कर्तास्य विद्यते ।
## उपादानं किमस्तीह विचारः सोऽयमीदृश ॥ १२ ॥

**கோ(அ)ஹம் கத²மித³ம் ஜாதம் கோ வா கர்தாஸ்ய வித்³யதே ।**
**உபாதா³னம் கிமஸ்தீஹ விசார: ஸோ(அ)யமீத்³ருஶ ॥ 12 ॥**

| | | |
|---|---|---|
| **अहं**<br>**அஹம்** | = | நான், |
| **कः**<br>**க:** | = | யார்? |
| **इदं**<br>**இத³ம்** | = | இந்த ஜகத், |
| **कथं जातं**<br>**கத²ம் ஜாதம்** | = | எப்படி உண்டானது? |
| **अस्य**<br>**அஸ்ய** | = | இதற்கு, |

**कर्ता** = கர்த்தாவாக (உண்டு பண்ணினவராக),

**கர்தா**

**को वा** = யார்,

**கோ வா**

**विद्यते** = இருக்கிறுர்?

**வித்³யதே**

**इह** = இங்கு,

**இஹ**

**उपादानं** = உபாதான காரணமாக,

**உபாதா³னம்**

**किं अस्ति** = எது இருக்கிறது,

**கிம் அஸ்தி**

**ईदृश** = இப்பேற்பட்ட,

**ஈத்³ருஶ**

**अयं** = இது,

**அயம்**

**सः विचारः** = அந்த விசாரம்.

**ஸ: விசார:**

"நான் யார்? இது (ஜகத்) எப்படி ஏற்பட்டது? இதை உண்டுபண்ணினவராக யார் இருக்கிறுர்? இது எதைக் கொண்டு செய்யப்பட்டிருக்கிறது?" இவ்விதம் ஆலோசிப் பதுதான் விசாரம் என்பது. **(12)**

**नाहं भूतगणो देहो नाहं चाक्षगणस्तथा ।**
**एतद्विलक्षणः कश्चिद्विचारः सोऽयमीदृशः ॥ १३ ॥**

**நாஹம் பூ⁴தக³ணோ தே³ஹோ நாஹம் சாக்ஷக³ணஸ்ததா² ।**
**ஏதத்³விலக்ஷண: கஶ்சித்³விசார: ஸோ(அ)யமீத்³ருஶ: ॥ 13 ॥**

**अहं** = நான்,

**அஹம்**

**भूतगणः** = ஐந்து பூதங்களின் கூட்டமான,

**பூ⁴தக³ண:**

**देहः** = சரீரமாக,

**தே³ஹ:**

**न** = இல்லை,

**ந**

| | | |
|---|---|---|
| **तथा**<br>**தநா²** | = | அவ்விதமே, |
| **अहं**<br>**அஹம்** | = | நான், |
| **अक्षगणश्च**<br>**அக்ஷக³ணஶ்ச** | = | இந்திரியங்களின் கூட்டமாகவும், |
| **न**<br>**ந** | = | இல்லை, |
| **एतद्विलक्षण:**<br>**ஏதத்³விலக்ஷண:** | = | இவைகளைக்காட்டிலும் மாறுபட்ட, |
| **कश्चित्**<br>**கஶ்சித்** | = | ஒருவன் (நான்), |
| **ईदृश:**<br>**ஈத்³ருஶ:** | = | இவ்விதமான, |
| **अयं**<br>**அயம்** | = | இது, |
| **स: विचार:**<br>**ஸ: விசார:** | = | அந்த விசாரம். |

"பஞ்ச பூதங்களின் கூட்டமான இந்த சரீரம் நான் அல்ல. அப்படியே இந்திரி யங்களின் கூட்டமும் நான் அல்ல. இவைகளுக்கெல்லாம் மாறுபட்ட லக்ஷ ணத்தோடு கூடிய ஒருவனே நான்" இவ்விதம் ஆலோசிப்பது தான் விசாரம் என்பது. **(13)**

**अज्ञानप्रभवं सर्वं ज्ञानेन प्रविलीयते ।**
**संकल्पो विविधः कर्ता विचारः सोऽयमीदृशः ॥ १४ ॥**

**அஜ்ஞானப்ரப⁴வம் ஸர்வம் ஜ்ஞானேன ப்ரவிலீயதே ।**
**ஸங்கல்போ விவித⁴: கர்தா விசார: ஸோ(அ)யமீத்³ருஶ: ॥ 14 ॥**

| | | |
|---|---|---|
| **अज्ञानप्रभवं**<br>**அஜ்ஞானப்ரப⁴வம்** | = | அக்ஞானத்திலிருந்து உண்டான, |
| **सर्वं**<br>**ஸர்வம்** | = | எல்லாம், |
| **ज्ञानेन**<br>**ஞானேன** | = | ஞானத்தால், |
| **प्रविलीयते**<br>**ப்ரவிலீயதே** | = | மறைந்து போகிறது, |

| | | |
|---|---|---|
| विविधः<br>விவித⁴: | = | பலவிதமான, |
| संकल्पः<br>ஸங்கல்ப: | = | ஸங்கல்பம், |
| कर्ता<br>கர்தா | = | கர்த்தா, |
| ईदृशः<br>ஈத்³ருஶ: | = | இப்பேற்பட்ட, |
| अयं<br>அயம் | = | இது, |
| सः<br>ஸ: | = | அந்த, |
| विचारः<br>விசார: | = | விசாரம். |

"யாவற்றும் அக்ஞானத்தினுல் ஏற்பட்டவை. ஞான மேற்பட்டவுடன் நன்ருக மறைந்துவிடும். பலவிதமான ஸங்கல்பமே எல்லாவற்றையும் உண்டு பண்ணுகிறது" இவ்விதம் ஆலோசிப்பது விசாரம். **(14)**

## एतयोर्यदुपादानमेकं सूक्ष्मं सदव्ययम् ।
## यथैव मृद्घटादीनां विचारः सोऽयमीदृशः ॥ १५ ॥

**ஏதயோர்யது³பாதா³னமேகம் ஸூக்ஷ்மம் ஸத³வ்யயம் ।**
**யதை²வ ம்ருத்³க⁴டாதீ³னும் விசார: ஸோ(அ)யமீத்³ருஶ: ॥ 15 ॥**

| | | |
|---|---|---|
| घटादीनां<br>க⁴டாதீ³னும் | = | குடம் முதலியவற்றிற்கு, |
| मृत्<br>ம்ருத் | = | மண், |
| यथैव<br>யதை²வ | = | எப்படியோ (உபாதானமோ) அதுபோல், |
| यत्<br>யத் | = | எது, |
| एकं<br>ஏகம் | = | ஒன்ருகவும், |
| सूक्ष्मं<br>ஸூக்ஷ்மம் | = | ஸூக்ஷ்மமாகவும், |

**सत्**

**ஸத்** = ஸத்தாகவும்,

**अव्ययं**

**அவ்யயம்** = குறைவற்றதாகவும் உள்ளதோ அது,

**एतयोः**

**ஏதயோ:** = இவ்விரண்டிற்கும்,

**उपादानं**

**உபாதா³னம்** = உபாதான காரணம்,

**ईदृशः**

**ஈத்³ருஶ:** = இப்பேர்ப்பட்ட,

**अयं**

**அயம்** = இது,

**सः**

**ஸ:** = அந்த,

**विचारः**

**விசார:** = விசாரம்.

"இவ்விரண்டிற்கும் உபாதானமாயிருப்பது ஒன்றுகவும், ஸூக்ஷ்மமாகவும், ஸத்தாகவும், குறைவற்றதாகவும் இருக்கும். எப்படி குடம் முதலானவைகளுக்கு மண் உபாதானமோ அப்படியே" இவ்விதம் ஆலோசிப்பது விசாரம். (15)

**अहमेकोऽपि सूक्ष्मश्च ज्ञाता साक्षी सदव्ययः।**
**तदहं नात्र संदेहो विचारः सोऽयमीदृशः ॥ १६ ॥**

**அஹமேகோ(அ)பி ஸூக்ஷ்மஶ்ச ஜ்ஞாதா ஸாக்ஷீ ஸத³வ்யய:।**
**தத³ஹம் நாத்ர ஸந்தே³ஹோ விசார: ஸோ(அ)யமீத்³ருஶ: ॥ 16 ॥**

**अहमपि**

**அஹமபி** = நானும்,

**एकः**

**ஏக:** = ஒருவனுகவும்,

**सूक्ष्मश्च**

**ஸூக்ஷ்மஶ்ச** = ஸூக்ஷ்மனுகவும்,

**ज्ञाता**

**ஜ்ஞாதா** = அறிகிறவனுகவும்,

**साक्षी**

**ஸாக்ஷீ** = ஸாக்ஷியாகவும்,

**सत्** = ஸத்தாகவும்,

**ஸத்**

**अव्ययः** = குறைவற்றவனுகவும் இருக்கிறேன். (ஆகையால்),

**அவ்யய:**

**अहं** = நான்,

**அஹம்**

**तत्** = அந்த ஜகத்காரண வஸ்துதான்,

**தத்**

**अत्र** = இதில்,

**அத்ர**

**न संदेहः** = ஸந்தேஹமில்லை,

**ந ஸந்தே³ஹ:**

**ईदृशः** = இவ்விதமான,

**ஈத்³ருஶ:**

**अयं** = இது,

**அயம்**

**सः** = அந்த,

**ஸ:**

**विचारः** = விசாரம்.

**விசார:**

"நான் ஒருவனுகவும் ஸூக்ஷ்மனுகவும், அறிகிறவனுகவும் ஸாக்ஷியாகவும் குறைவற்ற ஸத்ரூபனுகவும் இருக்கிறேன். நான் மேலே சொன்ன ஜகத்தின் உபா தான காரணமான பரமாத்மாதான் இதில் ஸந்தேஹமில்லை. ஜகத்காரண வஸ்து எப்படி ஒன்றுகவும் ஸூக்ஷ்மமாகவும் அறிகிறவனுகவும், ஸாக்ஷியாகவும், ஸத்தாக வும் அவ்யயமாகவுமிருக்கிறதோ அவ்விதமாகவே நானுமிருப்பதால் நானேதான் அவர். இவ்விதம் ஆலோசிப்பது விசாரம்.

## அக்ஞானஸ்வரூபம்: -

**आत्मा विनिष्कलो ह्येको देहो बहुभिरावृतः।**
**तयोरैक्यं प्रपश्यन्ति किमज्ञानमतः परम् ॥ १७ ॥**

**ஆத்மா விநிஷ்கலோ ஹ்யேகோ தே³ஹோ ப³ஹுபி⁴ராவ்ருத:।**
**தயோரைக்யம் ப்ரபஶ்யந்தி கிமஜ்ஞானமத: பரம் ॥ 17 ॥**

**आत्मा** = ஆத்மாவானது,

**ஆத்மா**

**विनिष्कलः** = எவ்விதப் பிரிவுமற்ற,

**விநிஷ்கல:**

**एको हि** = ஒரே வஸ்துவல்லவா!

**ஏகோ ஹி**

**देहः** = சரீரம்,

**தே³ஹ:**

**बहुभिः** = பல வேறு பாடுகளோடு,

**ப³ஹுபி⁴:**

**आवृतः** = கூடியது,

**ஆவ்ருத:**

**तयोः** = அந்த ஆத்மா, தேஹம் இரண்டிற்கும்,

**தயோ:**

**ऐक्यं** = ஒன்ருக இருக்கும் தன்மையை,

**ஐக்யம்**

**प्रपश्यन्ति** = பார்க்கின்றனர்,

**ப்ரபஶ்யந்தி**

**अतः** = இதைக்காட்டிலும்,

**அத:**

**परं** = மேலான,

**பரம்**

**अज्ञानं** = அக்ஞானம்,

**அஜ்ஞானம்**

**किं** = என்ன இருக்கிறது?

**கிம்**

"ஆத்மா எவ்விதப் பிரிவுமற்று ஒருவஞயிருப்பவர். தேஹமோ பலவித வேறுபாடுகளுடன் பலவாக உள்ளது" அப்படியிருந்தும் இரண்டையும் ஒருமைப்படு த்திப் பார்க்கிருர்கள், இதைவிட மேலான அக்ஞானம் உண்டா? **(17)**

**आत्मा नियामकश्चान्तर्देहो बाह्यो नियम्यकः ।**
**तयोरैक्यं प्रपश्यन्ति किमज्ञानमतः परम् ॥ १८ ॥**

**ஆத்மா நியாமகஶ்சாந்தர் தே³ஹோ பா³ஹ்யோ நியம்யக: ।**
**தயோரைக்யம் ப்ரபஶ்யந்தி கிமஜ்ஞானமத: பரம் ॥ 18 ॥**

**आत्मा** = ஆத்மாவானவர்,

**ஆத்மா**

| | | |
|---|---|---|
| अन्तः<br>அந்த: | = | உள்ளே இருந்து, |
| नियामकः<br>நியாமக: | = | ஏவுகிறவர், |
| बाह्यः<br>பா³ஹ்ய: | = | வெளிப்பட்டதான, |
| देहः<br>தே³ஹ: | = | தேஹம், |
| नियम्यकः<br>நியம்யக: | = | ஏவப்படுகிறது, |
| तयोः<br>தயோ: | = | அவ்விரண்டிற்கும், |
| ऐक्यं<br>ஐக்யம் | = | ஒருமையை, |
| प्रपश्यन्ति<br>ப்ரபஶ்யந்தி | = | பார்க்கின்றனர், |
| अतः<br>அத: | = | இதை விட, |
| परं<br>பரம் | = | மேலான, |
| अज्ञानं<br>அஜ்ஞானம் | = | அக்ஞானம், |
| किं<br>கிம் | = | என்ன இருக்கிறது? |

"ஆத்மா ஏவுகிறவர், உள்ளேயிருப்பவர். தேஹமோ ஏவப்படும் பதார்த்தம், வெளியில் உள்ளது" அப்படி இருந்தும் அவ்விரண்டையும் ஒன்றுகப் பார்க்கிறுர்கள். இதைவிட அக்ஞானம் வேறு என்ன உண்டு? **(18)**

**आत्मा ज्ञानमयः पुण्यो देहो मांसमयोऽशुचिः ।**
**तयोरैक्यं प्रपश्यन्ति किमज्ञानमतः परम् ॥ १९ ॥**

**ஆத்மா ஜ்ஞானமய: புண்யோ தே³ஹோ மாம்ஸமயோ(அ)ஶுசி: ।**
**தயோரைக்யம் ப்ரபஶ்யந்தி கிமஜ்ஞானமத: பரம் ॥ 19 ॥**

| | | |
|---|---|---|
| आत्मा<br>ஆத்மா | = | ஆத்மாவானது, |

ज्ञानमयः = ஞானஸ்வரூபம்,

ஞானமய꞉

पुण्यः = பரிசுத்தமானது,

புண்ய꞉

देहः = சரீரம்,

தே³ஹ꞉

मांसमयः = மாம்ஸ உருக் கொண்டது,

மாம்ஸமய꞉

अशुचिः = அசுத்தமானது,

அஶுசி꞉

तयोः = அவ்விரண்டிற்கும்,

தயோ꞉

ऐक्यं = ஒருமையை,

ஐக்யம்

प्रपश्यन्ति = பார்க்கின்றனர்,

ப்ரபஶ்யந்தி

अतः = இதைக்காட்டிலும்,

அத꞉

परं = மேலான,

பரம்

अज्ञानं = அக்ஞானம்,

அஜ்ஞானம்

किं = என்ன இருக்கிறது?

கிம்

"ஆத்மா ஞானஸ்வரூபம், சுத்தமானவர். தேஹமோ மாம்ஸத்தால் செய்யப் பட்டது, அசுத்தமானது." அப்படி இருந்தும் அவ்விரண்டையும் ஒன்றுகப்பார்க்கிறுர்கள். இதைவிட அக்ஞானம் வேறு என்ன உண்டு? **(19)**

**आत्मा प्रकाशकः स्वच्छो देहस्तामस उच्यते ।**
**तयोरैक्यं प्रपश्यन्ति किमज्ञानमतः परम् ॥ २० ॥**

**ஆத்மா ப்ரகாஶக꞉ ஸ்வச்சோ² தே³ஹஸ்தாமஸ உச்யதே ।**
**தயோரைக்யம் ப்ரபஶ்யந்தி கிமஜ்ஞானமத꞉ பரம் ॥ 20 ॥**

आत्मा = ஆத்மா,

ஆத்மா

| | | |
|---|---|---|
| **प्रकाशक:** | = | விளங்கவைப்பவர், |
| **ப்ரகாஶக:** | | |
| **स्वच्छ:** | = | நிர்மலர், |
| **ஸ்வச்ச²:** | | |
| **देह:** | = | சரீரம், |
| **தே³ஹ:** | | |
| **तामस:** | = | இருள் (அழுக்கு) உள்ளதாக, |
| **தாமஸ:** | | |
| **उच्यते** | = | சொல்லப்படுகிறது (அப்படியிருந்தும்), |
| **உச்யதே** | | |
| **तयो:** | = | அவ்விரண்டிற்கும், |
| **தயோ:** | | |
| **ऐक्यं** | = | ஒருமையை, |
| **ஐக்யம்** | | |
| **प्रपश्यन्ति** | = | பார்க்கின்றனர், |
| **ப்ரபஶ்யந்தி** | | |
| **अत: परं** | = | இதைவிட மேலான, |
| **அத: பரம்** | | |
| **अज्ञानं** | = | அக்ஞானம், |
| **அஜ்ஞானம்** | | |
| **किं** | = | என்ன இருக்கிறது? |
| **கிம்** | | |

"ஆத்மா விளங்க வைப்பவர், நன்கு தெளிவானவர். தேஹமோ இருட்டடைந்தது எனப்படுகிறது" அப்படி இருந்தும் இரண்டையும் ஒன்ருக பார்க்கிருர்கள். இதைவிட வேறு அக்ஞானம் என்ன உண்டு? **(20)**

**आत्मा नित्यो हि सद्रूपो देहोऽनित्यो ह्यसन्मयः।**
**तयोरैक्यं प्रपश्यन्ति किमज्ञानमतः परम् ॥ २१ ॥**

**ஆத்மா நித்யோ ஹி ஸத்³ரூபோ தே³ஹோ(அ)நித்யோ ஹ்யஸன்மய:।**
**தயோரைக்யம் ப்ரபஶ்யந்தி கிமஜ்ஞானமத: பரம் ॥ 21 ॥**

| | | |
|---|---|---|
| **आत्मा** | = | ஆத்மா, |
| **ஆத்மா** | | |
| **नित्य:** | = | அழிவற்றவர், |
| **நித்ய:** | | |

| | | |
|---|---|---|
| **सद्रूपो हि** **ஸத்³ரூபோ ஹி** | = | ஸத் வஸ்து, |
| **देहः** **தே³ஹ:** | = | தேஹம், |
| **अनित्यः** **அநித்ய:** | = | அழியக்கூடியது, |
| **असन्मयः** **அஸன்மய:** | = | அஸத்வஸ்து, |
| **तयोः** **தயோ:** | = | அவ்விரண்டிற்கும், |
| **ऐक्यं** **ஐக்யம்** | = | ஒருமையை, |
| **प्रपश्यन्ति** **ப்ரபஶ்யந்தி** | = | பார்க்கின்றனர், |
| **अतः** **அத:** | = | இதைக்காட்டிலும், |
| **परं** **பரம்** | = | மேலான, |
| **अज्ञानं** **அஜ்ஞானம்** | = | அக்ஞானம், |
| **किं** **கிம்** | = | என்ன இருக்கிறது? |

"ஆத்மாவோ நித்யர், ஸத்ஸ்வரூபர். தேஹமோ அநித்யம், அஸத் ஸ்வரூபம்" அப்படியிருந்தும் இவ்விரண்டையும் ஒன்றுகப் பார்க்கிறுர்கள், இதைவிட வேறு அக்ஞானம் என்ன உண்டு? **(21)**

**आत्मनस्तत्प्रकाशत्वं यत्पदार्थावभासनम् ।**
**नाग्न्यादिदीप्तिवद्दीप्तिर्भवत्यान्ध्यं यतो निशि ॥ २२ ॥**

**ஆத்மனஸ்தத் ப்ரகாஶத்வம் யத் பதா³ர்தா²வபா⁴ஸனம் ।**
**நாக்³ன்யாதி³தீ³ப்திவத்³ தீ³ப்திர் ப⁴வத்யாந்த்⁴யம் யதோ நிஶி ॥ 22 ॥**

| | | |
|---|---|---|
| **पदार्थावभासनं यत्** **பதா³ர்தா²வபா⁴ஸனம் யத்** | = | பொருள்களை விளங்கும்படி செய்வது என்பது யாதொன்று உண்டோ, |
| **तत्** **தத்** | = | அதுதான், |

| | | |
|---|---|---|
| **आत्मनः**<br>**ஆத்மனः** | = | ஆத்மாவின், |
| **प्रकाशत्वं**<br>**ப்ரகாஶத்வம்** | = | பிரகாசத்தன்மை, |
| **अग्न्यादिदीप्तिवत्**<br>**அக்³ன்யாதி³தீ³ப்திவத்** | = | அக்னி முதலியவைகளின் வெளிச்சம்போல், |
| **दीप्तिः**<br>**தீ³ப்தி:** | = | வெளிச்சம், |
| **न**<br>**ந** | = | (ஆத்மாவின் பிரகாசம்) அல்ல, |
| **यतः**<br>**யதः** | = | எதனுல் (வெளிச்சம்) இல்லாவிட்டால், |
| **निशि**<br>**நிஶி** | = | இரவில் (இருளில்), |
| **आन्ध्यं**<br>**ஆந்த்⁴யம்** | = | குருட்டுத்தனம், |
| **भवति**<br>**ப⁴வதி** | = | ஏற்படுகிறதோ. |

மற்றப்பதார்த்தங்களை தெரியும்படி செய்வதே ஆத்மாவின் பிரகாசத்தன்மை. ஆனுல் அந்தப்பிரகாசம் அக்னி முதலானவைகளின் பிரகாசம் போலுள்ளதல்ல, (அவைகள் இல்லையானுல்) ராத்திரியில் இருட்டாகிவிடுகிறதே (ஆத்மா எக்காலத்திலும் இல்லையென்று ஆகாததினுல் அதன் பிரகாசம் எப்பொழுதும் குன்றுது.) **(22)**

**देहोऽहमित्ययं मूढो मत्वा तिष्ठत्यहो जनः।**
**ममायमित्यपि ज्ञात्वा घटद्रष्टेव सर्वदा ॥ २३ ॥**

**தே³ஹோ(அ)ஹமித்யயம் மூடோ⁴ மத்வா திஷ்ட²த்யஹோ ஜனः।**
**மமாயமித்யபி ஜ்ஞாத்வா க⁴டத்³ரஷ்டேவ ஸர்வதா³ ॥ 23 ॥**

| | | |
|---|---|---|
| **घटद्रष्टेव**<br>**க⁴டத்³ரஷ்டேவ** | = | குடத்தைப்பார்ப்பவன்போல, |
| **अयं**<br>**அயம்** | = | இது, |
| **ममः**<br>**மமः** | = | என்னுடையது, |
| **इति**<br>**இதி** | = | என்று, |

**सर्वदा** = எப்போதும்,
**ஸர்வதா3**

**ज्ञात्वाऽपि** = அறிந்துகொண்டிருந்தபோதிலும்கூட,
**ஜ்ஞாத்வா(அ)பி**

**अयं** = இந்த,
**அயம்**

**मूढः** = முட்டாளான,
**மூட4:**

**जनः** = மனிதன்,
**ஜன:**

**अहं** = நான்,
**அஹம்**

**देहः** = சரீரம்,
**தே3ஹ:**

**इति** = என்று,
**இதி**

**मत्वा** = எண்ணிக்கொண்டு,
**மத்வா**

**तिष्ठति** = நிற்கிறனே,
**திஷ்ட2தி**

**अहो** = என்ன ஆச்சர்யம்!
**அஹோ**

குடத்தைப் பார்த்துக்கொண்டிருக்கிறவன் போல "**இது என்னுடைய** சரீரம்" என்று எப்பொழுதும் தெரிந்து கொண்டிருக்கும்போதே, இந்த மூடனுன மனுஷ்யன் "நான் சரீரம்" என்று நினைத்துக்கொண்டு நிற்கிறனே, என்ன ஆச்சர்யம்! **(23)**

### ஞானஸ்வரூபம்: -

**ब्रह्मैवाहं समः शान्तः सच्चिदानन्दलक्षणः।**
**नाहं देहो ह्यसद्रूपो ज्ञानमित्युच्यते बुधैः ॥ २४ ॥**

**ப்3ரஹ்மைவாஹம் ஸம: ஶாந்த: ஸச்சிதா3னந்த3லக்ஷண:।**
**நாஹம் தே3ஹோ ஹ்யஸத்3ரூபோ ஜ்ஞானமித்யுச்யதே பு3தை4: ॥ 24 ॥**

**अहं** = நான்,

**அஹம்**

**समः** = ஸமமானதும்,

**ஸம:**

**शान्तः** = சாந்தமானதும்,

**ஶாந்த:**

**सच्चिदानन्दलक्षणः** = ஸச்சிதானந்தஸ்வரூபமுமான,

**ஸச்சிதா³னந்த³லக்ஷண:**

**ब्रह्मैव** = ப்ரஹ்மமே,

**ப்³ரஹ்மைவ**

**अहं** = நான்,

**அஹம்**

**असद्रूपः** = அஸத்ஸ்வரூபமான,

**அஸத்³ரூப:**

**देहः न** = சரீரமல்ல. (இது),

**தே³ஹ: ந**

**ज्ञानमिति** = ஞானமென்று,

**ஜ்ஞானமிதி**

**बुधैः** = அறிவாளிகளால்,

**பு³தை⁴:**

**उच्यते** = சொல்லப்படுகிறது

**உச்யதே**

"நான் பிரஹ்மமே, ஸமமானவன், சாந்தன், ஸத்தாகவும் சித்தாகவும் ஆனந்த மாகவும் இருக்கும் தன்மை உள்ளவன். நான் அஸத்ஸ்வரூபமாயிருக்கும் தேஹ மல்ல" என்று உணர்வதையே ஞானமென்று அறிவாளிகள் சொல்கிறுர்கள். **(24)**

**निर्विकारो निराकारो निरवद्योऽहमव्ययः।**
**नाहं देहो ह्यसद्रूपो ज्ञानमित्युच्यते बुधैः ॥ २५ ॥**

**நிர்விகாரோ நிராகாரோ நிரவத்³யோ(அ)ஹமவ்யய:।**
**நாஹம் தே³ஹோ ஹ்யஸத்³ரூபோ ஜ்ஞானமித்யுச்யதே பு³தை⁴: ॥ 25 ॥**

**अहं** = நான்,

**அஹம்**

**निर्विकारः** = மாறுதலற்றவன்,

**நிர்விகார:**

**निराकार:** = உருவமற்றவன்,

**நிராகார:**

**निरवद्य:** = தோஷங்களற்றவன்,

**நிரவத்³ய:**

**अव्यय:** = குறைவு அற்றவன்,

**அவ்யய:**

**असद्रूप:** = அஸத்ஸ்வரூபமான,

**அஸத்³ரூப:**

**देह:** = சரீரம்,

**தே³ஹ:**

**नाहं** = நான் அல்ல, (இது),

**நாஹம்**

**ज्ञानमिति** = ஞானமென்று,

**ஜ்ஞானமிதி**

**बुधै:** = அறிவாளிகளால்,

**பு³தை⁴:**

**उच्यते** = சொல்லப்படுகிறது.

**உச்யதே**

"நான் மாறுதலற்றவன், உருவமற்றவன், தோஷமற்றவன், குறைவற்றவன், அஸத் ஸ்வரூபமாயுள்ள தேஹம் நான் அல்ல" என்பதே ஞானமென்று அறிவாளி களால் சொல்லப்படுகிறது. **(25)**

## निरामयो निराभासो निर्विकल्पोऽहमाततः।
## नाहं देहो ह्यसद्रूपो ज्ञानमित्युच्यते बुधैः ॥ २६ ॥

**நிராமயோ நிராபா⁴ஸோ நிர்விகல்போ(அ)ஹமாதத:।**
**நாஹம் தே³ஹோ ஹ்யஸத்³ரூபோ ஜ்ஞானமித்யுச்யதே பு³தை⁴: ॥ 26 ॥**

**अहं** = நான்,

**அஹம்**

**निरामय:** = வியாதியற்றவன்,

**நிராமய:**

**निराभास:** = தோற்றமற்றவன்,

**நிராபா⁴ஸ:**

**निर्विकल्प:** = விகல்பங்களற்றவன்,

**நிர்விகல்ப:**

**आततः** = எங்கும் பரவியிருப்பவன்,

**ஆதத:**

**अहं** = நான்,

**அஹம்**

**असद्रूपः** = அஸத்ஸ்வரூபமான,

**அஸத்³ரூப:**

**देहः न** = தேஹம் அல்ல (இது),

**தே³ஹ: ந**

**ज्ञानमिति** = ஞானமென்று,

**ஜ்ஞானமிதி**

**बुधैः** = வித்வான்களால்,

**பு³தை⁴:**

**उच्यते** = சொல்லப்படுகிறது.

**உச்யதே**

"நான் வியாதியற்றவன், தோற்றமற்றவன், ஸந்தேஹிக்க இடமற்றவன், எங்கும் பரவியிருப்பவன். நான் அஸத் ஸ்வரூபமாயிருக்கும் தேஹம் அல்ல" இதுவே ஞானமென்று அறிவாளிகளால் சொல்லப்படுகிறது. **(26)**

**निर्गुणो निष्क्रियो नित्यो नित्यमुक्तोऽहमच्युतः।**
**नाहं देहो ह्यसद्रूपो ज्ञानमित्युच्यते बुधैः ॥ २७ ॥**

**நிர்கு³ணோ நிஷ்க்ரியோ நித்யோ நித்யமுக்தோ(அ)ஹமச்யுத:।**
**நாஹம் தே³ஹோ ஹ்யஸத்³ரூபோ ஜ்ஞானமித்யுச்யதே பு³தை⁴: ॥ 27 ॥**

**अहं** = நான்,

**அஹம்**

**निर्गुणः** = குணங்களற்றவன்,

**நிர்கு³ண:**

**निष्क्रियः** = க்ரியைகள் அற்றவன்,

**நிஷ்க்ரிய:**

**नित्यः** = அழிவற்றவன்,

**நித்ய:**

**नित्यमुक्तः** = எப்பொழுதும் முக்தன்,

**நித்யமுக்த:**

**अत्युतः** = தன் நிலையிலிருந்து நழுவாதவன்.

**அத்யுத:**

**अहं** = நான்,

**அஹம்**

**असद्रूप:** = அஸத்ஸ்வரூபமான,

**அஸத்³ரூப:**

**देहो न** = சரீரம் அல்ல (இது),

**தே³ஹோ ந**

**ज्ञानमिति** = ஞானமென்று,

**ஞானமிதி**

**बुधै:** = அறிவாளிகளால்,

**பு³தை⁴:**

**उच्यते** = சொல்லப்படுகிறது.

**உச்யதே**

"நான் குணமற்றவன், கிரியையற்றவன், நித்யன், எப்பொழுதுமே முக்தன், நழுவாதவன். நான் அஸத் ரூபமான தேஹம் அல்ல" என்பதே ஞானமென்று அறிவாளிகளால் சொல்லப்படுகிறது. **(27)**

## निर्मलो निश्चलोऽनन्तः शुद्धोऽहमजरोऽमरः।
## नाहं देहो ह्यसद्रूपो ज्ञानमित्युच्यते बुधैः ॥ २८ ॥

**நிர்மலோ நிஶ்சலோ(அ)னந்த: ஶுத்³தோ⁴(அ)ஹமஜரோ(அ)மர:।**
**நாஹம் தே³ஹோ ஹ்யஸத்³ரூபோ ஜ்ஞானமித்யுச்யதே பு³தை⁴: ॥ 28 ॥**

**अहं** = நான்,

**அஹம்**

**निर्मल:** = அழுக்கற்றவன்,

**நிர்மல:**

**निश्चल:** = அசைவற்றவன்,

**நிஶ்சல:**

**अनन्त:** = முடிவற்றவன்,

**அனந்த:**

**शुद्ध:** = பரிசுத்தன்,

**ஶுத்³த⁴:**

**अजर:** = மூப்பு அற்றவன்,

**அஜர:**

**अमर:** = சாவு அற்றவன்,

**அமர:**

| | | |
|---|---|---|
| **अहं**<br>**அஹம்** | = | நான், |
| **असद्रूप:**<br>**அஸத்³ரூப:** | = | அஸத்ஸ்வரூபமான, |
| **देहो न**<br>**தே³ஹோ ந** | = | தேஹமல்ல (இது), |
| **बुधै:**<br>**பு³தை⁴:** | = | வித்வான்களால், |
| **ज्ञानमिति**<br>**ஞானமிதி** | = | ஞானமென்று, |
| **उच्यते**<br>**உச்யதே** | = | சொல்லப்படுகிறது. |

"நான் அழுக்கற்றவன், அசைவற்றவன், முடிவற்றவன், சுத்தன், ஜரையற்றவன், மரணமற்றவன். நான் அஸத் ரூபமான தேஹம் அல்ல" என்பதே ஞானம் என்று அறிவாளிகளால் சொல்லப்படுகிறது. **(28)**

## தேஹம் ஆத்மாவல்ல: -

**(அ) பிரதிவாதி கேட்கிறுன்: -**

**स्वदेहं शोभनं त्यक्त्वा पुरुषाख्यं च संमतम् ।**
**किं मूर्ख शून्यमात्मानं देहातीतं करोषि भो ॥ २९ ॥**

**ஸ்வதே³ஹம் ஶோப⁴னம் த்யக்த்வா புருஷாக்²யம் ச ஸம்மதம் ।**
**கிம் மூர்க² ஶூன்யமாத்மானம் தே³ஹாதீதம் கரோஷி போ⁴ ॥ 29 ॥**

| | | |
|---|---|---|
| **शोभनं**<br>**ஶோப⁴னம்** | = | அழகானதும், |
| **पुरुषाख्यं च**<br>**புருஷாக்²யம் ச** | = | புருஷன் என்று யெயருள்ளதும், |
| **संमतं**<br>**ஸம்மதம்** | = | (எல்லோராலும்) ஒப்புக்கொள்ளப்பட்டதுமான, |
| **स्वदेहं**<br>**ஸ்வதே³ஹம்** | = | தனது சரீரத்தை, |
| **त्यक्त्वा**<br>**த்யக்த்வா** | = | விட்டுவிட்டு, |
| **भोमूर्ख**<br>**போ⁴மூர்க²** | = | ஏ முட்டாளே!, |

**देहातीतं** = தேஹத்திற்கு அப்பால்பட்டதான,

**தே³ஹாதீதம்**

**शून्यं** = சூன்யத்தை (ஒன்றுமில்லாததை),

**ஶூன்யம்**

**आत्मानं** = ஆத்மாவாக,

**ஆத்மானம்**

**किं करोषि** = ஏன் செய்கிறுய்?

**கிம் கரோஷி**

புருஷன் என்று அழைக்கப்படுவதாயும் எல்லாராலும் ஒப்புக்கொள்ளப்பட்ட தாகவும், அழகாகவும் இருக்கிற தன் தேஹத்தை விட்டு விட்டு, ஏ அசடே, தேகத்திற் கெல்லாம் அப்பால்பட்டதாக இருக்கும் வெறும் சூன்யத்தை ஆத்மாவாகச் செய்து விடப் பார்க்கிறீரா? **(29)**

(அ) **பதில் கூறுகிறுர்: -**

**स्वात्मानं श्रृणु मूर्ख त्वं श्रुत्या युक्त्या च पूरुषम् ।**
**देहातीतं सदाकारं सुदुर्दर्शं भवादृशाम् ॥ ३० ॥**

**ஸ்வாத்மானம் ஶ்ர்ருணு மூர்க² த்வம் ஶ்ருத்யா யுக்த்யா ச பூருஷம் ।**
**தே³ஹாதீதம் ஸதா³காரம் ஸுது³ர்த³ர்ஶம் ப⁴வாத்³ருஶாம் ॥ 30 ॥**

**मूर्ख** = முட்டாளே,

**மூர்க²**

**देहातीतं** = தேஹத்திற்கு அப்பால்பட்டதும்,

**தே³ஹாதீதம்**

**सदाकारं** = ஸத்ஸ்வரூபமாயும்,

**ஸதா³காரம்**

**भवादृशां** = உங்களைப் போன்றவர்களுக்கு,

**ப⁴வாத்³ருஶாம்**

**सुदुर्दर्शं** = ஸுலபமாக அறியமுடியாததும்,

**ஸுது³ர்த³ர்ஶம்**

**पूरुषं** = புருஷனுமான,

**பூருஷம்**

**स्वात्मानं** = தன் ஆத்ம ஸ்வரூபத்தைப்பற்றி,

**ஸ்வாத்மானம்**

**श्रुत्या** = வேதத்தைக் கொண்டும்,

**ஶ்ருத்யா**

| | | |
|---|---|---|
| **युक्त्या च** <br> **யுக்த்யா ச** | = | யுக்தியைக்கொண்டும், |
| **त्वं श्रृणु** <br> **த்வம் ஶ்ர்ருணு** | = | (சொல்கிறேன்) நீ கேள். |

ஏ அசடே, உன்னுடைய ஆத்மாவைப் பற்றி வேதத்தின் மூலமாயும் யுக்தியினாலும் (சொல்கிறேன்) நீ கேள். புருஷன் என்கிற அந்த ஆத்மா தேஹங்களுக்கு அப்பால்பட்டவர், ஸத்தையே ஸ்வரூபமாயுடையவர், உங்களைப் போலுள்ளவர்களால் எளிதில் அறியப்படுவதற்கு முடியாதவர். **(30)**

## अहंशब्देन विख्यात एक एव स्थितः परः ।
## स्थूलस्त्वनेकतां प्राप्तः कथं स्याद्देहकः पुमान् ॥ ३१ ॥

**அஹம்ஶப்³தே³ன விக்²யாத ஏக ஏவ ஸ்தி²த: பர: ।**
**ஸ்தூ²லஸ்த்வனேகதாம் ப்ராப்த: கத²ம் ஸ்யாத்³தே³ஹக: புமான் ॥ 31 ॥**

| | | |
|---|---|---|
| **अहंशब्देन** <br> **அஹம்ஶப்³தே³ன** | = | 'நான்' என்ற சப்தத்தால், |
| **विख्यात:** <br> **விக்²யாத:** | = | பிரஸித்தரான ஆத்மா, |
| **एक एव** <br> **ஏக ஏவ** | = | ஒருவராகவே, |
| **स्थित:** <br> **ஸ்தி²த:** | = | இருக்கிறார், |
| **पर:** <br> **பர:** | = | (அவர்) மேலானவர், |
| **स्थूलस्तु** <br> **ஸ்தூ²லஸ்து** | = | ஸ்தூலமான சரீரமோ, |
| **अनेकतां** <br> **அனேகதாம்** | = | பலவாக இருக்கும் தன்மையை, |
| **प्राप्त:** <br> **ப்ராப்த:** | = | அடைந்திருக்கிறது, |
| **पुमान्** <br> **புமான்** | = | புருஷன், |
| **देहक:** <br> **தே³ஹக:** | = | வெறுக்கத்தக்க சரீரமாக, |
| **कथं स्यात्** <br> **கத²ம் ஸ்யாத்** | = | எப்படி இருக்கமுடியும்? |

நான் என்ற சப்தத்தினுல் நன்கு பிரஸித்தரானவர், ஒருவராகவே இருப்பவர், எல்லாவற்றிலும் மேலானவர். சரீரமோ ஸ்தூலம், பலவிதத் தன்மையை அடைந்துள்ளது. புருஷன் இந்த வெறுக்கத்தக்க தேஹமாக எப்படி இருக்க முடியும்? **(31)**

## अहं द्रष्टृतया सिद्धो देहो दृश्यतया स्थितः ।
## ममायमिति निर्देशात्कथं स्याद्देहकः पुमान् ॥ ३२ ॥

**அஹம் த்³ரஷ்ட்ருதயா ஸித்³தோ⁴ தே³ஹோ த்³ருஶ்யதயா ஸ்தி²த꞉ ।**
**மமாயமிதி நிர்தே³ஶாத்கத²ம் ஸ்யாத்³தே³ஹக꞉ புமான் ॥ 32 ॥**

**अहं** = நான் என்ற ஆத்மா,
**அஹம்**

**द्रष्टृतया** = பார்க்கும் தன்மை உள்ளவனுக,
**த்³ரஷ்ட்ருதயா**

**सिद्धः** = நிச்சயமாக இருக்கிறுன்,
**ஸித்³த⁴꞉**

**देहः** = சரீரம்,
**தே³ஹ꞉**

**दृश्यतया** = பார்க்கப்படும் தன்மை உள்ளதாக,
**த்³ருஶ்யதயா**

**स्थितः** = இருக்கிறது. (மேலும்),
**ஸ்தி²த꞉**

**अयं** = இது,
**அயம்**

**मम** = என்னுடையது,
**மம**

**इति** = என்று,
**இதி**

**निर्देशात्** = குறிப்பிடுகிறபடியாலும்,
**நிர்தே³ஶாத்**

**देहकः** = வெறுக்கத்தக்க சரீரம்,
**தே³ஹக꞉**

**पुमान्** = ஆத்மாவாக,
**புமான்**

**कथं स्यात्** = எப்படி இருக்கும்?
**கத²ம் ஸ்யாத்**

நான் பார்க்கிறவனுக இருப்பவன், தேஹம் பார்க்கப்படுவதாக இருக்கிறது. தவிரவும் "இது என்னுடையது" என்று சுட்டிக்காட்ட முடிகிறது. அப்படியிருக்க புருஷன் இந்த வெறுக்கத்தக்க தேஹமாக எப்படி இருக்க முடியும்? **(32)**

## अहं विकारहीनस्तु देहो नित्यं विकारवान् ।
## इति प्रतीयते साक्षात्कथं स्याद्देहकः पुमान् ॥ ३३ ॥

**அஹம் விகாரஹீனஸ்து தே³ஹோ நித்யம் விகாரவான் ।**
**இதி ப்ரதீயதே ஸாக்ஷாத் கத²ம் ஸ்யாத்³ தே³ஹக꞉ புமான் ॥ 33 ॥**

| | | |
|---|---|---|
| **अहं** அஹம் | = | நான், |
| **विकारहीनः** விகாரஹீன꞉ | = | மாறுதல் அடையாதவன், |
| **देहस्तु** தே³ஹஸ்து | = | சரீரமோவெனில், |
| **नित्यं** நித்யம் | = | எப்பொழுதும், |
| **विकारवान्** விகாரவான் | = | மாறுதலுள்ளது, |
| **इति** இதி | = | என்று, |
| **साक्षात्** ஸாக்ஷாத் | = | நேரிடையாக, |
| **प्रतीयते** ப்ரதீயதே | = | அறியப்படுகிறது (ஆகையால்), |
| **पुमान्** புமான் | = | புருஷன், |
| **देहकः** தே³ஹக꞉ | = | வெறுக்கத்தக்க தேஹமாக, |
| **कथं स्यात्** கத²ம் ஸ்யாத் | = | எப்படி இருக்கும்? |

நான் ஒருபொழுதும் மாறுபாடு அடையாமல் ஒரே நிஜலயிலிருப்பவன். சரீரமோ எப்பொழுதும் மாறுதல் அடைந்துகொண்டே இருக்கிறது. இந்த விஷயம் நேரிடையாக நமக்குத்தெரிகிறது. இத்தஜன வித்யாஸம் இருக்க புருஷன் எப்படி தேஹமாக இருக்கக்கூடும்? **(33)**

**यस्मात्परमिति श्रुत्या तया पुरुषलक्षणम् ।**
**विनिर्णीतं विशुद्धेन कथं स्याद्देहकः पुमान् ॥ ३४ ॥**

**யஸ்மாத்பரமிதி ஶ்ருத்யா தயா புருஷலக்ஷணம் ।**
**விநிர்ணீதம் விஶுத்³தே⁴ன கத²ம் ஸ்யாத்³தே³ஹக: புமான் ॥ 34 ॥**

| | | |
|---|---|---|
| **यस्मात्** <br> **யஸ்மாத்** | = | எதைக்காட்டிலும், |
| **परं** <br> **பரம்** | = | மேலானது (இல்லை), |
| **इति** <br> **இதி** | = | என்ற, |
| **तया श्रुत्या** <br> **தயா ஶ்ருத்யா** | = | அந்த சுருதி வாக்யத்தால், |
| **पुरुषलक्षणं** <br> **புருஷலக்ஷணம்** | = | புருஷனின் ஸ்வரூபம், |
| **विशुद्धेन** <br> **விஶுத்³தே⁴ன** | = | பரிசுத்தமானதாக, |
| **विनिर्णीतं** <br> **விநிர்ணீதம்** | = | நன்கு தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. (அதனால்), |
| **पुमान्** <br> **புமான்** | = | அந்தப் புருஷன், |
| **कथं** <br> **கத²ம்** | = | எப்படி, |
| **देहकः** <br> **தே³ஹக:** | = | வெறுக்கத்தக்க தேஹமாக, |
| **स्यात्** <br> **ஸ்யாத்** | = | இருக்கக்கூடும்? |

அந்த வேதத்தினால் "எதற்கு மேலாக (ஒன்றும் கிடையாதோ)" என்று புருஷனுடைய லக்ஷணம் அதிசுத்தத் தன்மையென்று நன்கு நிர்ணயம் செய்யப்பட்டிருக்கிறது. அந்த புருஷன் வெறுக்கத்தக்க தேஹமாய் எப்படி இருக்க முடியும்? **(34)**

**सर्वं पुरुष एवेति सूक्ते पुरुषसंज्ञिते ।**
**अप्युच्यते यतः श्रुत्या कथं स्याद्देहकः पुमान् ॥ ३५ ॥**

**ஸர்வம் புருஷ ஏவேதி ஸூக்தே புருஷஸஞ்ஜ்ஞிதே ।**
**அப்யுச்யதே யத: ஶ்ருத்யா கத²ம் ஸ்யாத்³தே³ஹக: புமான் ॥ 35 ॥**

**पुरुषसंज्ञिते** = புருஷன் என்று பெயருள்ள,
**புருஷஸஞ்ஜ்ஞிதே**
**सूक्तेऽपि** = ஸூக்தத்திலும் (புருஷஸூக்தத்திலும்),
**ஸூக்தே(அ)பி**
**सर्वं** = எல்லாம்,
**ஸர்வம்**
**पुरुष एव** = புருஷன் தான்,
**புருஷ ஏவ**
**इति** = என்று,
**இதி**
**श्रुत्या** = சுருதியால்,
**ஶ்ருத்யா**
**यतः** = எந்தக் காரணத்தால்,
**யத:**
**उच्यते** = சொல்லப்படுகிறதோ (அதனுல்),
**உச்யதே**
**पुरुषः** = புருஷன்,
**புருஷ:**
**देहकः** = வெறுக்கத்தக்க தேஹமாக,
**தே³ஹக:**
**कथं स्यात्** = எப்படி இருக்கும்?
**கத²ம் ஸ்யாத்**

புருஷ ஸூக்தத்திலும் வேதத்திஞல் "இது எல்லாம் புருஷனே" (**पुरुप एवेद सर्वस्**) (**புருப ஏவேத³ ஸர்வஸ்**) என்று சொல்லியிருக்கிறபோது புருஷன் இந்த அல்பதேஹமாக எப்படி இருக்கமுடியும்? **(35)**

## असङ्गः पुरुषः प्रोक्तो बृहदारण्यकेऽपि च ।
## अनन्तमलसंसृष्टः कथं स्याद्देहकः पुमान् ॥ ३६ ॥

**அஸங்க³: புருஷ: ப்ரோக்தோ ப்³ருஹதா³ரண்யகே(அ)பி ச ।**
**அனந்தமலஸம்ஸ்ருஷ்ட: கத²ம் ஸ்யாத்³தே³ஹக: புமான் ॥ 36 ॥**

**बृहदारण्यकेऽपि च** = பிருஹதாரண்யக உபநிஷத்திலும்,
**ப்³ருஹதா³ரண்யகே(அ)பி ச**
**पुरुषः** = புருஷன்,
**புருஷ:**

| | | |
|---|---|---|
| **असङ्गः** | = | ஒன்றிலும் ஸம்பந்தமில்லாதவனாக, |
| **அஸங்க³:** | | |
| **प्रोक्तः** | = | சொல்லப்பட்டிருக்கிறான். (அப்படியிருக்க), |
| **ப்ரோக்த:** | | |
| **अनन्तमलसंसृष्टः** | = | எல்லையில்லாத அழுக்குகளுடன்கூடிய, |
| **அனந்தமலஸம்ஸ்ருஷ்ட:** | | |
| **देहकः** | = | வெறுக்கத்தக்க தேஹமாக, |
| **தே³ஹக:** | | |
| **पुमान्** | = | புருஷன், |
| **புமான்** | | |
| **कथं स्यात्** | = | எப்படி இருக்கும்? |
| **கத²ம் ஸ்யாத்** | | |

பிருஹதாரண்யகோபநிஷத்திலும் "இந்த புருஷன் எவ்விதப் பற்றுதலுமற்றவன்" (**असङ्गो ह्ययं पुरुषः-बृह**) (**அஸங்கோ³ ஹ்யயம் புருஷ:-ப்³ருஹ**) (4-3-16) என்று சொல்லப்பட்டிருக்கிறான். எல்லையில்லாத மலங்களால் சேர்ந்து செய்யப்பட்டிருக்கும் இந்த வெறுக்கத்தக்க தேஹமாக புருஷன் எப்படி இருக்கமுடியும்? **(36)**

## तत्रैव च समाख्यातः स्वयंज्योतिर्हि पूरुषः।
## जडः परप्रकाश्योऽयं कथं स्याद्देहकः पुमान् ॥ ३७ ॥

**தத்ரைவ ச ஸமாக்²யாத: ஸ்வயஞ்ஜ்யோதிர்ஹி பூருஷ: ।**
**ஜட³: பரப்ரகாஶ்யோ(அ)யம் கத²ம் ஸ்யாத்³தே³ஹக: புமான் ॥ 37 ॥**

| | | |
|---|---|---|
| **तत्रैव च** | = | அங்கேயே, |
| **தத்ரைவ ச** | | |
| **पूरुषः** | = | புருஷன், |
| **பூருஷ:** | | |
| **स्वयंज्योतिः** | = | ஸ்வயம் ஜ்யோதிஸ்வரூபமாக (பிறவஸ்துவால் |
| **ஸ்வயஞ்ஜ்யோதி:** | | பிரகாசிக்கப்படாமல் தானே பிரகாசித்துக்கொண்டு மற்றதைப் பிரகாசப்படுத்துவது ஸ்வயம்ஜ்யோதி எனப்படும்), |
| **समाख्यातो हि** | = | சொல்லப்பட்டிருக்கிறானல்லவா? |
| **ஸமாக்²யாதோ ஹி** | | |
| **जडः** | = | ஜடமாயும் (தான் பிரகாசிக்காமலும்), |
| **ஜட³:** | | |
| **परप्रकाश्यः** | = | வேறொன்றால் விளக்கப்படத்தக்கதாயுமுள்ள, |
| **பரப்ரகாஶ்ய:** | | |

**अयं** = இந்த,
**அயம்**
**देहकः** = வெறுக்கத்தக்க சரீரம்,
**தே³ஹக**
**कथं** = எப்படி,
**கத²ம்**
**पुमान्** = புருஷனாக,
**புமான்**
**स्यात्** = இருக்கும்?
**ஸ்யாத்**

அந்த பிருஹதாரண்யக உபநிஷத்திலேயே "புருஷன் ஸ்வயம் ஜ்யோதி ஸ்வரூபன்" (**अत्रायं पुरुषः स्वयंज्योतिर्भवति बृह अத்ராயம் புருஷ: ஸ்வயஞ்ஜ்யோதிர்ப⁴வதி ப்³ருஹ** 4-3-9) என்று சொல்லப்பட்டிருக்கிறான். ஜடமாயும் வேறென்றினால் விளக்கப்பட வேண்டியதாயும் இருக்கிற இந்த வெறுக்க த்தக்க தேஹமாக புருஷன் எப்படி இருக்க முடியும்? **(37)**

**प्रोक्तोऽपि कर्मकाण्डेन ह्यात्मा देहाद्विलक्षणः।**
**नित्यश्च तत्फलं भुङ्क्ते देहपातादनन्तरम् ॥ ३८ ॥**

**ப்ரோக்தோ(அ)பி கர்மகாண்டே³ன ஹ்யாத்மா தே³ஹாத்³விலக்ஷண:।**
**நித்யஶ்ச தத்ப²லம் பு⁴ங்க்தே தே³ஹபாதாத³னந்தரம் ॥ 38 ॥**

**कर्मकाण्डेनापि** = வேதத்திலுள்ள கர்மகாண்டத்தினாலும் கூட,
**கர்மகாண்டே³னாபி**
**देहात् विलक्षणः** = தேஹத்தைக்காட்டிலும் மாறுபட்ட
**தே³ஹாத் விலக்ஷண:** ஸ்வபாவமுள்ளவனும்,
**नित्यश्च** = அழிவற்றவனுமான,
**நித்யஶ்ச**
**आत्मा** = ஆத்மாவானவன்,
**ஆத்மா**
**देहपातादनन्तरं** = தேஹம் விழுந்த பிறகு,
**தே³ஹபாதாத³னந்தரம்**
**तत्फलं** = அதன் (கர்மாவின்) பலனை
**தத்ப²லம்** (ஸுகதுக்கங்களை),
**भुङ्क्ते** = அனுபவிக்கிறான் (என்று),
**பு⁴ங்க்தே**

**प्रोक्तः हि** = சொல்லப்பட்டிருக்கிறது அல்லவா!

**ப்ரோக்த꞉ ஹி**

வேதத்திலுள்ள கர்ம காண்டத்தில்கூட தேஹத்தை விட வேறுக ஒரு ஆத்மா இருப்பதாகவும், தேஹம் விழுந்த பிறகு அந்த ஆத்மா அழிவற்றவனுக இருந்து கர்மாவின் பலனை அனுபவிப்பதாகவும், சொல்லப்பட்டிருக்கிறது. ஆதலால் தேஹத்தைக் காட்டிலும் ஆத்மா வேறு. **(38)**

## லிங்கசரீரம் ஆத்மாவல்ல: -

## लिङ्गं चानेकसंयुक्तं चलं दृश्यं विकारि च ।
## अव्यापकमसद्रूपं तत्कथं स्यात्पुमानयम् ॥ ३९ ॥

**லிங்க³ம் சானேக ஸம்யுக்தம் சலம் த்³ருஶ்யம் விகாரி ச ।**
**அவ்யாபகமஸத்³ரூபம் தத் கத²ம் ஸ்யாத் புமானயம் ॥ 39 ॥**

**लिङ्गं च** = லிங்க (ஸூக்ஷ்ம) சரீரமும்,
**லிங்க³ம் ச**
**अनेकसंयुक्तं** = பலவற்றுடன் கூடியது,
**அனேகஸம்யுக்தம்**
**चलं** = அசைவுள்ளது,
**சலம்**
**दृश्यं** = அறியப்படக்கூடியது,
**த்³ருஶ்யம்**
**विकारि च** = மாறுதலும் அடைகிறது,
**விகாரி ச**
**अव्यापकं** = எங்குமில்லாதது,
**அவ்யாபகம்**
**असद्रूपं** = அஸத்ஸ்வரூபமானது,
**அஸத்³ரூபம்**
**तत्** = அந்த ஸூக்ஷ்ம சரீரம்,
**தத்**
**अयं** = இந்த,
**அயம்**
**पुमान्** = புருஷனுக,
**புமான்**
**कथं स्यात्** = எப்படி இருக்கமுடியும்?
**கத²ம் ஸ்யாத்**

லிங்கமென்கிற ஸூக்ஷ்ம சரீரத்தில் பல வஸ்துக்கள் சேர்ந்திருக்கின்றன. அது அசைவுள்ளது, ஞானத்திற்கு விஷயமானது, மாறுதலடையக்கூடியது, வியாபக மல்லாதது, அஸத் ஸ்வரூபம். அந்த ஸூக்ஷ்ம சரீரம் எப்படி இந்த புருஷனாக இருக்கமுடியும்? **(39)**

## एवं देहद्वयादन्य आत्मा पुरुष ईश्वरः।
## सर्वात्मा सर्वरूपश्च सर्वातीतोऽहमव्ययः ॥ ४० ॥

**ஏவம் தே³ஹத்³வயாத³ன்ய ஆத்மா புருஷ ஈஶ்வர:।**
**ஸர்வாத்மா ஸர்வரூபஶ்ச ஸர்வாதீதோ(அ)ஹமவ்யய: ॥ 40 ॥**

**एवं** = இவ்வாறு,
**ஏவம்**

**देहद्वयात्** = (ஸ்தூலம், ஸூக்ஷ்மம் என்ற) இரு சரீரங்களிலிருந்தும்,
**தே³ஹத்³வயாத்**

**अन्यः** = வேறுபட்டவரான,
**அன்ய:**

**आत्मा** = ஆத்மா,
**ஆத்மா**

**पुरुषः** = புருஷன்,
**புருஷ:**

**ईश्वरः** = ஈசுவரன்,
**ஈஶ்வர:**

**सर्वात्मा** = எல்லாவற்றிற்கும் ஆத்மாவாக இருப்பவர்,
**ஸர்வாத்மா**

**सर्वरूपश्च** = எல்லாமாகவும் இருப்பவர்,
**ஸர்வரூபஶ்ச**

**सर्वातीतः** = எல்லாவற்றிற்கும் அப்பால்பட்டவர்,
**ஸர்வாதீத:**

**अव्ययः** = குறைவற்றவர்,
**அவ்யய:**

**अहं** = (அவரே) நான்.
**அஹம்**

இவ்விதம் (ஸ்தூலம் ஸூக்ஷ்மம் என்கிற) இரண்டு தேஹங்களுக்கும் வேறுபட்டவராய் இருப்பவரே ஆத்மா. அவர்தான் புருஷன், ஈசுவரன், எல்லாவற்றிற்கும் ஆத்மாவாயிருப்பவர், எல்லா ரூபத்தையும் தரிப்பவர், எல்லாவற்றிற்கும் அப்பால்பட்டவர், குறைவற்றவர். அவர்தான் நான்.

## ஜகத் பிரஹ்மத்தைத்தவிர வேறல்ல: -

**इत्यात्मदेहभानेन प्रपञ्चस्यैव सत्यता ।**
**यथोक्ता तर्कशास्त्रेण ततः किं पुरुषार्थता ॥ ४१ ॥**

**இத்யாத்மதே³ஹ பா⁴னேன ப்ரபஞ்சஸ்யைவ ஸத்யதா ।**
**யதோ²க்தா தர்க ஶாஸ்த்ரேண தத: கிம் புருஷார்த²தா ॥ 41 ॥**

| | | |
|---|---|---|
| **इति** <br> **இதி** | = | இவ்வாறு, |
| **आत्मदेहभानेन** <br> **ஆத்மதே³ஹபா⁴னேன** | = | ஆத்மாவே (அக்ஞானத்தால்) தேஹமாகத் தோன்றுவதால், |
| **तर्कशास्त्रेण** <br> **தர்க ஶாஸ்த்ரேண** | = | நியாய சாஸ்திரத்திஞல், |
| **प्रपञ्चस्य** <br> **ப்ரபஞ்சஸ்ய** | = | பிரபஞ்சத்திற்கு, |
| **सत्यता एव** <br> **ஸத்யதா ஏவ** | = | உண்மையாயிருக்கும் தன்மையே, |
| **यथोक्ता** <br> **யதோ²க்தா** | = | எவ்வாறு சொல்லப்பட்டுள்ளதோ, |
| **ततः** <br> **தத:** | = | அதஞல், |
| **किं पुरुषार्थता** <br> **கிம் புருஷார்த²தா** | = | புருஷார்த்தமான மோக்ஷம் கிடைக்குமா? |

இவ்விதம் ஆத்மா தேஹமாகத் தோன்றுவதஞல் ஜகத் ஸத்யம்தான் என்று தர்க்க சாஸ்திரத்தில் சொல்லப்படுகிறது. ஆஞல் அதஞல் புருஷார்த்தமான மோக்ஷம் ஸித்திக்குமா? **(41)**

**इत्यात्मदेहभेदेन देहात्मत्वं निवारितम् ।**
**इदानीं देहभेदस्य ह्यसत्त्वं स्फुटमुच्यते ॥ ४२ ॥**

**இத்யாத்மதே³ஹபே⁴தே³ன தே³ஹாத்மத்வம் நிவாரிதம் ।**
**இதா³னீம் தே³ஹ பே⁴த³ஸ்ய ஹ்யஸத்த்வம் ஸ்பு²டமுச்யதே ॥ 42 ॥**

| | | |
|---|---|---|
| **इति** <br> **இதி** | = | இவ்வாறு, |
| **आत्मदेहभानेन** <br> **ஆத்மதே³ஹபா⁴னேன** | = | ஆத்மா வேறு, தேஹம் வேறு என்ற காரணத்தால், |

| | | |
|---|---|---|
| **देहात्मत्वं**<br>**தே³ஹாத்மத்வம்** | = | தேஹத்திற்கு ஆத்மத் தன்மையானது, |
| **निवारितं**<br>**நிவாரிதம்** | = | மறுக்கப்பட்டது, |
| **इदानीं**<br>**இதா³னீம்** | = | இப்பொழுது, |
| **देहभेदस्य**<br>**தே³ஹ பே⁴த³ஸ்ய** | = | தேஹத்திலுள்ள வேற்றுமைக்கு, |
| **असत्त्वं**<br>**அஸத்த்வம்** | = | இல்லாதிருக்கும் தன்மை, |
| **स्फुटं**<br>**ஸ்பு²டம்** | = | தெளிவாக, |
| **उच्यते**<br>**உச்யதே** | = | சொல்லப்படுகிறது. |

இவ்விதம் ஆத்மா வேறு தேஹம் வேறு என்ற காரணத்தால் தேஹமே ஆத்மா என்பது மறுக்கப்பட்டது. இப்பொழுது தேஹம் வேறு என்பதும் வாஸ்தவ மில்லை என்று தெளிவாய் சொல்லப்படுகிறது. **(42)**

**चैतन्यस्यैकरूपत्वाद्भेदो युक्तो न कर्हिचित् ।**
**जीवत्वं च मृषा ज्ञेयं रज्ज्वां सर्पग्रहो यथा ॥ ४३ ॥**

**சைதன்யஸ்யைகரூபத்வாத்³ பே⁴தோ³ யுக்தோ ந கர்ஹிசித் ।**
**ஜீவத்வம் ச ம்ருஷா ஜ்ஞேயம் ரஜ்ஜ்வாம் ஸர்பக்³ரஹோ யதா² ॥ 43 ॥**

| | | |
|---|---|---|
| **चैतन्यस्य**<br>**சைதன்யஸ்ய** | = | சைதன்யமானது, |
| **एकरूपत्वात्**<br>**ஏகரூபத்வாத்** | = | ஒரேவிதமாக இருப்பதால், |
| **कर्हिचित्**<br>**கர்ஹிசித்** | = | ஒருக்காலும், |
| **भेदः**<br>**பே⁴த³:** | = | வேற்றுமையானது, |
| **न युक्तः**<br>**ந யுக்த:** | = | பொருந்தியதல்ல, |
| **रज्ज्वां**<br>**ரஜ்ஜ்வாம்** | = | கயிற்றில், |

| | | |
|---|---|---|
| **सर्पग्रहो यथा**<br>**ஸர்பக்³ரஹோ யதா²** | = | பாம்பு என்ற ஞானம்போல, |
| **जीवत्वं च**<br>**ஜீவத்வம் ச** | = | (சைதன்யத்திற்கு) ஜீவனாக இருக்கும் தன்மையும், |
| **मृषा**<br>**ம்ருஷா** | = | பொய்யானதாக, |
| **ज्ञेयं**<br>**ஞேயம்** | = | அறியத்தக்கது. |

சைதன்யம் ஒரேவிதமாக இருப்பதால் அதில் எப்பொழுதும் வேற்றுமை பொருந்தாது. ஆகையால் கயிற்றில் பாம்பு என்று எண்ணுவது எப்படி வாஸ்தவமல்லவோ அப்படியே (சைதன்யத்தினிடத்தில்) ஜீவனாக இருக்கும் தன்மை பொய் என்று அறியவேண்டும். **(43)**

## रज्ज्वज्ञानात्क्षणेनैव यद्वद्रज्जुर्हि सर्पिणी ।
## भाति तद्वच्चितिः साक्षाद्विश्वाकारेण केवला ॥ ४४ ॥

**ரஜ்ஜ்வஜ்ஞானாத் க்ஷணேனைவ யத்³வத்³ ரஜ்ஜுர்ஹி ஸர்பிணீ ।**
**பா⁴தி தத்³வச்சிதி: ஸாக்ஷாத்³ விஶ்வாகாரேண கேவலா ॥ 44 ॥**

| | | |
|---|---|---|
| **रज्ज्वज्ञानात्**<br>**ரஜ்ஜ்வஜ்ஞானாத்** | = | கயிற்றைத் தெரிந்துகொள்ளாததால், |
| **क्षणेनैव**<br>**க்ஷணேனைவ** | = | ஒரு நிமிஷத்திற்குள்ளேயே, |
| **यद्वत्**<br>**யத்³வத்** | = | எவ்வாறு, |
| **रज्जुः**<br>**ரஜ்ஜு:** | = | கயிறு, |
| **सर्पिणी**<br>**ஸர்பிணீ** | = | பாம்பின் தோற்றத்துடன்கூடியதாக ஆகிறதோ, |
| **तद्वत्**<br>**தத்³வத்** | = | அவ்வாறே, |
| **केवला**<br>**கேவலா** | = | தனிப்பட்டதான, |
| **चितिः**<br>**சிதி:** | = | சைதன்யம், |
| **विश्वाकारेण**<br>**விஶ்வாகாரேண** | = | பிரபஞ்சமாக, |

